Regd. No. 2975.

ஸ்ரீ:

# SRI RAMANUJAN

*Editor*: P. B. ANNANGARACHARYA, KANCHEEPURAM-3.

# ஸ்ரீ ராமாநுஜன் - 280.

ஆசிரியர்: P. B. அண்ணங்கராசாரியர்.

வருஷச் சந்தா ரூ. 10. ஜீவியச் சந்தா ரூ. 58.

பேரருளாளன் பெருந்தேவித் தாயார் திருவடிகளே சரணம்.



ஆழ்வார் எம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

ஆழ்வார்கள் வாழி அருளிச்செயல் வாழி *
தாழ்வாது மில்குரவர் தாம்வாழி * — ஏழ்பாரு
முய்ய வவர்க ளுரைத்தவைகள் தாம்வாழி *
செய்யமறை தன்னுடனே சேர்ந்து.

1—2—1972 தை மாதம் வெளியிடப்பட்டது.

# சீவரத்து மலையில் சீரியதோர் பேச்சு

தை மாதம் முதல் தேதி மகரஸங்க்ராந்தியன்றிரவு 10 மணிக்குமேல் தேவப் பெருமாள் ஸன்னிதியிலிருந்து புறப்பட்டருளி மறுநாள் காலை பழைய சீவரத்து மலை மேல் மண்டபத்தில் சேர்வர். அன்று மாலை நான்கு மணியிலிருந்து அங்கு மஹோத் ஸவம் கண்டருள்வது மாநில முழுதுமறிந்தது. பதினுயிரக் கணக்கான பக்த ஜனங் கள் திரண்டுவந்து கோலாஹலமாக அனுபவிக்கும் பெரிய திருவிழா இது. சென்னை யிலிருந்து பல பல பெரியவர்கள் வந்து கூடுவர். பிரபல சோதிடரென்று பேர்பெற்ற ஸ்ரீ உ. வே. பண்டித காழியூர் ஸ்ரீநிவாஸாசாரியார் இந்த உத்ஸவத்திற்குத் தவருது வருபவர். இவர் இளமையில் நமது பாடசாலையில் பயின்றவராதலால் அங்கு வரும் போதெல்லாம் நம்மைச் சந்தித்துச் சுவைமிக்க இனிய பல மொழிகள் பேசுவர் நேற்று 16—1—72ல் பேசியபேச்சையிங்குத் தெரிவிக்கிறேன்.

ஹரிகதா காலக்ஷேபங்கள் செய்பவர்களில் பின்பாட்டுக்காரர் என்று ஒருவ ருண்டே. அத்தகைய ஒருவர் ஐம்பது வருடமாக ஒரு பெரியவர்க்குப் பின்பாட்டுக் காரராயிருந்துவருகிருர். இத்தனை வருடகாலம் இவர் கதைகளைவிடாமல் கேட்டுவரு கிருரே, இன்று இவரையே கதை சொல்லும்படி நியமிப்போமென்று நினைத்து ஒரு நாள் அவரை நியமித்தாராம். அவரும் சந்தோஷத்துடன் இசைந்து ராமதாஸ் கதை சொல்லுவதாகத் தொடங்கி

ஒரு பாட்டைப் பாடிவிட்டு, இப்பவும்—இப்பவும்—என்னவென்ருல் அதாவது, இப்போது கதை என்னவென்ருல்—இப்பவும்—இப்பவும் என்று திருப்பித் திருப்பிச் சொல்லிக் கொண்டிருந்தாராம். மேலே நுகழ்ச்சியைச் சொல்லுவதற்குள் பெருமாள் மண்டபத்திலிருந்து புறப்பாடு கண்டருளியாயிற்று. இயலுக்குப்போக நேர்ந்து விட்டது. இக் கதையை முடியக் கேட்கப்பெறவில்லையேயென்று குறையுற்ருேம்.

**P. B. A.**

ஸ்ரீ:

# ஸ்ரீ ராமாநுஜன் 280



சென்னை ஸத்க்ரந்த ப்ரகாசன ஸபையின் சார்பாக மாதந்தோறும் வெளிவருவது

ஆசிரியர்: P. B. அண்ணங்கராசாரியர்.

| | | |
|---|---|---|
| ஸம்புடம் 23 | விரோதிக்ருத்ஸு தைமீ<br>1—2—1972 | ஸஞ்சிகை 4 |


## "தையில் மகமின்று"

உபதேசரத்தினமாலையில் ☼நான்மறையோர் கொண்டாடும் நாள்☼ நற்றவர்கள் கொண்டாடும் நாள்☼ நல்லவர்கள் கொண்டாடும் நாள் ☼நாற்றிசையுங் கொண்டாடும் நாள்☼ என்றிப்படி விலக்ஷணமாகக் கொண்டாடப்படும் நாட்களில் „நற்றவர்கள் கொண்டாடும்நாள் இன்று. மகம் என்கிற நக்ஷத்திரத்தை ஆகாயத்தில் காட்டுமவர்கள் ஸப்தர்ஷிகள் சூழவிருக்குமடையாளத்தையிட்டுக் காட்டுவர்கள் ஆகவே திருமழிசையாழ்வாருடையதிருவவதார நக்ஷத்திரமான மகத்தை நல்தவர்கள் **கொண்டாடும் நாள்** என்றது மிகப்பொருத்தமானது. சரித்திரவகையில் இவ்வாழ்வார் ப்ருகுமஹர்ஷியின் தொடர்புபெற்றவராதலாலும் நற்றவர்கள் கொண்டாடும் நாள் என்பது ஏற்கும். உபதேசரத்தினமாலைப்பாசுரத்தில் „துயயமதி பெற்ற மழிசைப்பிரான்☼ என்றது குறிக்கொள்ளத்தக்கது. ஆழ்வார்களெல்லாரும் துய்யமதி பெற்றவர்களாயிருக்கச் செய்தேயும் இவ்வாழ்வார் துய்யமதி பெற்றமை விசேஷமுடைத்தல்லவா? "சாக்கியங்கற்றோம் சமண்கற்றோம் சங்கரனுராக்கிய ஆகம நூலாராய்ந்தோம்" என்றபடி இவ்வாழ்வார் பலமதங்களிலும் புகுந்திருந்து முடிவாகப் பேயாழ்வார் பேரருளால் பரதத்வநிலை தேர்ந்து துய்யமதி பெற்ற ஏற்றமுண்டன்றே இவர்க்கு.

இவ்வாழ்வார்க்கு ஆசார்யஹ்ருதயத்தில் "உறையிலிடாதவர்" என்று ஸங்கேத நாமம் சாத்தப்பெற்றுள்ளது. பரமத நிரஸனத்திற்காகக் கையில் கொண்ட வாளை உறையிலிடாதவர் என்றபடி. வாளைக் கொண்டு செய்ய நினைத்த காரியம் தலைக்கட்டினாலன்றோ வாளை உறையிலிட்டு உள்ளேவைப்பது. அந்தக்காரியம் இவ்வாழ்வார்க்கு முடிவு பெற்றதாகாமே நிச்சலும் நிகழ்ந்துவருவதாகக் கூறினபடி. ஸ்ரீமந்நாராயண பரத்துவத்தை ஓயாதே ஸ்தாபிப்பதில் ஊக்கமுடையவர் இவ்வாழ்வாரொருவரே என்பது கருத்து. இவ்வாழ்வாருடைய முதற் பிரபந்தமான நான்முகன் திருவந்தாதியில்.

“கல்லாதவரிலங்கை கட்டழித்த காகுத்த
னல்லா லொரு தெய்வம்யானிலேன்—பொல்லாத
தேவரைத் தேவரல்லாரைத் திருவில்லாத்
தேவரைத் தேறேன்மின்தேவு.”

என்கிறவொரு பாசுரமே நிச்சலுமநுஸந்திக்கத்தகும். மற்றுமுள்ள ஆழ்வார்களும் நாராயணபாரம்ய ஸ்தாபனத்தில் ச்ரத்தை கொண்டவர்களேயாயினும் அதில் இவருடைய ச்ரத்தை அப்ரமேயம் என்பது தோன்ற “உறையிலிடாதவர்” என்று விலக்ஷணமான திருநாமத்தை ஆசார்யஹ்ருதயகாரர் வழங்கினர்.

பெரிய திருமொழியில் அஞ்சாம்பத்தில் பத்தாந்திருமொழி நந்திபுரவிண்ணகரப் பதிகம். அதில் நிகமனப்பாசுரத்தில் ஆழ்வார் தமக்கு இட்டுக்கொண்ட விசேஷணத்தையும் எம்பெருமானுக்கு இட்ட விசேஷணத்தையும் நோக்கின பெரியவாச்சான் பிள்ளை இன்சுவைப் பொருளொன்று அருளிச் செய்கிறார் காண்மின். ஆழ்வார் தமக்கு இட்டுக்கொண்ட விசேஷணம் ‘‘கறைவளரும் வேல்வல்ல (கலியன்)” என்பது. எம்பெருமானுக்கு இட்ட விசேஷணமோ வென்னில்; “உறைகொள் புகராழி சுரிசங்கமவையங்கையுடையான்’’ என்பது. எம்பெருமான் தன்னுடைய திவ்யாயுதங்களை உறையிலிட்டு வைத்திருப்பதாகச் சொல்லிற்று. ஆழ்வார் தம்மைக் ‘‘கறைவளரும் வேல்வல்ல கலியன்” என்கையாலே தம்முடைய வேற்படைக்குக் கறை கழுவ அவகாசமின்மையால் அது வளர்ந்துகொண்டே செல்வதாகத் தெரிவிக்கப்பட்டதாயிற்று.

இங்குப் பெரியவாச்சான் பிள்ளை ஸ்ரீஸூக்தி: –

“விரோதிநிரஸநத்துக்குத் திருமங்கையாழ்வார் கையில் வேல் உண்டான பின்பு திருவாழி உறையிட்டிருக்குங்காண்.” என்பதாம்.

ஸ்ரீஸுதர்சந சதகத்தில் திருவாழியாழ்வானுடைய சத்ரு நிரஸனப்பெருமைகளை அவருடைய அவயவங்களான ஜ்வாலை, அக்ஷம், நேமி, அரம் நாபி என்னுமவற்றில் ஏறிட்டுச் சொல்லியிருப்பதுபோல, திருமங்கையாழ்வாருடைய ஸ்ரீஸூக்திமூலகமான விரோதி நிரஸநப் பெருமையை அவருடைய வேற்படையில் ஏறிட்டுச் சொன்னதாகக் கொள்க. ப்ரக்ருதம் திருமழிசைப்பிரானை உறையிலிடாதவர் என்றதும் தமக்கொரு கத்தியுண்டாய் அதை உறையிலிடாதவர் என்றபடியன்று. ஸ்ரீமந்நாராயண பரத்வத்தையும் தேவதாந்தரங்களின் அவரத்வத்தையும் அடுத்தடுத்து அருளிச் செய்பவரென்றவாறு.

இவ்வாழ்வாருக்கு சயனத் திருக்கோலமான எம்பெருமான்களிடத்திலேயே மிக்க ஈடுபாடு. தமது திருவந்தாதியில் சயனத் திருக்கோலமுள்ள திருப்பதிகளைச் சேர்த்து ஒருபாசுரம் பாடியுள்ளார்; அதாவது.

“நாகத் தணைக் குடந்தை வெஃகாத் திருவெவ்வுள்
நாகத் தணையரங்கம் பேர் அன்பில்—நாகத்
தணைப்பாற் கடல்கிடக்கு மாதி நெடுமால்
அணைப்பார் கருத்தனாவான்” —என்பது.

திருவெஃகாவிலும் திருக்குடந்தையிலும் இவ்வாழ்வாருடைய வைபவம் வீறு பெற்றமை ப்ரஸித்தம். *திருவெஃகா* என்பது காஞ்சீபுரம் ஸ்ரீ யதோக்தகாரி யெம்பெருமான் ஸன்னிதி. அங்கு இவ்வாழ்வார் கணிகண்ணனென்கிற சிஷ்யனோடு எழுந்தருளியிருக்குங் காலத்தில் அவ்வூரரசனுடைய கொடுங்கோன்மையினால் கணிகண்ணன் ஊரைவிட்டு வெளியேற நேர்ந்தபோது அவனைவிட்டுப் பிரிந்திருக்கமாட்டாத ஆழ்வார் எம்பெருமானெதிரே சென்று "கணிகண்ணன் போகின்றான் காமருபூங் கச்சி மணிவண்ணா நீ கிடக்கவேண்டா, துணிவுடைய மெய்ந்நாப் புலவனும் போகின்றேன் நீயுமுன்றன் பைந்நாகப்பாய் சுருட்டிக்கொள்" என்று விண்ணப்பஞ் செய்ய, அப்படியே பைந்நாகப் பாயைச் சுருட்டிக் கொண்டு ஆழ்வாரைப் பின் சென்றதாகவும், அப்போது கச்சி நகர் முழுவதும் இருள்மூடிப்போக அரசன் விஷயமறிந்து தான் பட்ட அபசாரத்திற்கு நொந்து பரிவாரங்களுடன் ஓடிச்சென்று பாலாற்றங்கரையிலே எம்பெருமானோடு கூடவிருக்கும் ஆழ்வாரைக் கண்டு க்ஷமை வேண்டிக்கொள்ள ஆழ்வாரும் திருவுள்ளமிரங்கி எம்பெருமானை நோக்கி "கணிகண்ணன் போக்கொழிந்தான் காமருபூங்கச்சி, மணிவண்ணா! நீ கிடக்கவேண்டும்—துணிவுடைய மெய்ந்நாப் புலவனும் மீள்கின்றான், நீயுமுன்றன் பைந்நாகப் பாய்விரித்துக்கொள்" என்று வேண்ட, அப்படியே மீண்டெழுந்தருளி முன்போல் சயனித்தருளினதாக இதிஹாஸம். இவ்வைதிஹ்யம் ஸ்ரீ யதோக்தகாரி யெம்பெருமான் ஸன்னிதியில் *தையில் மகத்தன்று* உத்ஸவரூபமாகவும் நெடுநாளாகக் கொண்டாடப்பட்டு வருகின்றது.

இக்காலத்தவர்கள் எதிலும் ஆக்ஷேபம் நிகழ்த்துமவர்களாதலால் "அசல மூர்த்தியான எம்பெருமான் அரவணையைச் சுருட்டிக்கொண்டு ஆழ்வாரைப் பின் சென்றார் என்பது கட்டுக் கதை" என்கிறார்கள். இங்ஙனே பலவிஷயங்களில் பேதையர்களின் பேச்சுக்கள் உள்ளன. பிரகிருதம் இவ்விஷயத்தில்மட்டும் ஆஸ்திகர்களுக்குத் தெரிவிக்கிறேன். கீழே விவரித்த ஐதிஹ்யம் சில தமிழ் நூற்களில் மட்டும் காணப்பட்டால் இதில் அவநம்பிக்கையுண்டாகலாம். வேதாந்த தேசிகருடைய ஜீவித காலம் எப்போதென்பதை உலகமறியும். அவ்வாசிரியர் ஸ்ரீ யதோக்தகாரி யெம்பெருமானைப்பற்றி இயற்றியுள்ள வடமொழித் தோத்திரத்தில் இவ்வைதிஹ்யத்தை எடுத்துக்காட்டியுள்ளவிதம் மிக அற்புதமானது; அதனைக் கேண்மின்.

(அதில் ஆறுவது சுலோகத்தில்)

"ப்ரத்யாதிசந்தி பவஸஞ்சரணம் ப்ரஜாநாம் பக்தாநுகந்துரிஹ யஸ்ய கதாகதாநி" என்றது ஆச்சரியமான பணிப்பு. இதன் பொருளென்னவென்றால், ஒருபக்தன் சொற்படி அவன்பின்னே போவதும் திரும்பிவருவதுமான செயலை யநுஸந்தித்தால், நரகத்திற்குப்போவதும் கருக்குழிக்குத் திரும்புவதுமாகச் செல்லுகிற நம்முடைய கதாகதங்கள் தொலையுமென்கை. மாறிமாறிப்பல பிறப்பும் பிறப்பதாகிற நம்முடைய ஸம்ஸரணம் தொலையுமென்றவாறு. மேலே எட்டாவது சுலோகத்தில் "*சரணமுபகதாநாம் ஸோயமாதேசகாரீ*" என்றிருப்பதும் இவ்வைதிஹ்யத்தையே உட்கொண்டதாயினும் அதற்கு ஏதேனும் அந்யதாஸித்தி சொல்லிவிடக் கூடும்

இவ்வாழ்வார்தாமே திருக்குடந்தை ஆராவமுதன் ஸன்னிதியிலும் சிலகாலம் வாழ்ந்திருந்தபோது அப்பெருமானுடைய பக்த பராதீநத்வத்தைபும் வெளிப்படுத்தினார்; எங்ஙனே யென்னில்; (திருச்சந்த விருத்தத்தில்)

"நடந்தகால்கள் நொந்தவோ நடுங்க ஞாலமேனமாய்
இடந்த மெய்குலுங்கவோ இலங்குமால் வரைச்சுரம்
கடந்த கால் பரந்த காவிரிக்கரைக் குடந்தையுள்
கிடந்தவாறு?" என்று ஸாதித்து விட்டு. "**எழுந்திருந்து பேசு**" என்றார்.

உடனே ஆராவமுதன் அரவணையிலிருந்து எழுந்திருக்கத் தொடங்கினான்; உடனே "அடியேனுக்காக அர்ச்சாவதாரஸமாதியைக் குலைத்துக்கொள்ள விரும்பியது போதும்" என்று. "வாழிகேசனே" என்றார். கேசவா! இங்ஙனமே வாழ்ந்திடுக வென்கை. இற்றைக்கும் ஆராவமுதன் உத்தாநசாயியாக ஸேவைதந்தருளுமழகை பக்தர்கள் அநுபவிக்கவேணும்.

திருமழிசைப்பிரானுக்கு அடுத்தவரான நம்மாழ்வார் திருவாய்மொழியில் "ஆராவமுதே அடியேனுடலம்" என்கிற திருக்குடந்தைப் பதிகத்தில் ஒன்பதாம் பாட்டில் "அசைவில் உலகம் பரவக் கிடந்தாய்!" என்பதனால் இதனை விளங்கவைத் தருளி யிருக்கிறாரென்பதை நுண்மதியோருணர்வர், **அசைவில்**—திருமழிசைப் பிரானுக்காக அசைந்து கொடுத்ததில் என்றபடி. அப்பாசுரத்தில் மூன்றாமடியில் "செழுமாமணிகள் சேருந்திருக்குடந்தை" என்றவிடத்து ஈடு முப்பத்தாறாயிரப்படியில் திருமழிசைப் பிரானையெடுத்துக் காட்டியிருப்பதும் நோக்கத்தக்கது. ... ... *

# சென்னையில் திருப்பாவை ஸதஸ்ஸுகள்

நேற்று மார்கழி மாதத்தில் சென்னையில் பல பேட்டைகளிலும் நடைபெற்ற திருப்பாவை ப்ரவசனங்கள் மொத்தம் அறுபத்திரண்டென்று சிலர் கணக்கெடுத்துத் தெரிவித்தார்கள். ஸமாசார பத்திரிகைகளில் Engagements என்ற மகுடத்தின்கீழ் வெளிவந்தவற்றை மட்டுங்கொண்டு தெரிவித்த கணக்கு இதுவென்றும், பத்ரிகைகளில் வெளிவராத ப்ரவசனங்கள் இன்னமும் அதிகமாகவே யுண்டென்றும் சிலர் தெரிவித்தனர். சிலர் மூலமான பாசுரத்தையே எழுதிவைத்துக்கொண்டு வாசித்துப் பொருளுரைத்தனர் என்றும் சொன்னார் சிலர் "பட்டர் பிரான் கோதை சொன்ன சங்கத் தமிழ்மாலை" என்றாள் ஆண்டாள் **சங்கம் சங்கமாக**—திரள் திரளாக இருந்து அநுபவிக்கக்கூடிய தமிழ்மாலை திருப்பாவை-என்றபடி. திருப்பாவையை எவ்விடத்தில் யார் பிரவசனம் செய்தாலும் ச்ரோதாக்களின் சங்கம் [திரள்] மலிந்தே யிருக்குமென்னத் தட்டில்லை நம்மாழ்வார் (2—3—1) "குழாங்களாய் அடியீர்! உடன் கூடி நின்றாடுமினே" என்று திருவாய்மொழியைக் குழாங்கூடி யநுபவிக்க வேணுமென்று பாரித்தார். கம்பர் சடகோபரந்தாதியில் "கூட்டங்கள்தோறுங் குருகைப் பிரான் குணங்கூறுமன்பரீட்டங்கள்தோறு மிருக்கப்பெற்றேம்" என்றார். எனினும் திருவாய்மொழி ப்ரவசனத்திற்கு இவ்வளவு கூட்டங்கூடுவது அரிதுதான். ஆண்டாளுடைய திருவாக்குக்கு அமைந்த அதிசயம் அஸாதாரணமே

ப்ரவசனங்கள் தவிர "திருப்பாவை ஸதஸ்"ஸென்று சிலவிடங்களில் சில பெரியார்கள் ஆங்காங்கு ஞாயிற்றுக் கிழமைகளில் நடத்தினார்கள். ஆங்காங்கு திருப்பாவை ப்ரவசனம் செய்கிற வித்வான்களில் ஐந்தாறு நபர்களையோ ஏழெட்டு நபர்களையோ வரவழைத்து மூன்று பாசுரங்களின் ஸாரத்தைப் பத்து நிமிஷத்தில் சொல்லவேணுமென்றும், ஐந்து பாசுரங்களின் ஸாரத்தைப் பதினைந்து நிமிஷங்களில் பேசவேணுமென்றும் நியமித்து, அவரவர்கள் பீடிகை தொடங்கும்போதே

கடிகாரத்தைக் காட்டுவதும், அவர்களும் இதோ ஆய்விட்டது என்பதும் ஒரு விநோதக் காட்சியாக இருந்தது. இதைப்பற்றி ஒரு ஸதஸ்ஸில் அடியேன் உபந்யஸித்ததை இங்கு விஜ்ஞாபிக்கிறேன்; திருமங்கையாழ்வார் பெரிய திருமொழியில் (10—10—6)

"கோழிகூவென்னுமால் தோழிநானென் செய்கேன்!
ஆழிவண்ணர் வரும் பொழுதாயிற்று, கோழிகூ வென்னுமால்."

என்றொரு பாசுரம் பணித்துள்ளார். இப்பாட்டின் அந்வய கிரமம் கேளீர்; கோழிகூ வென்னுமால் ஆழிவண்ணர் வரும் பொழுதாயிற்று; கோழிகூவென்னுமால் தோழி நானென் செய்கேன்! என்றிங்ஙனே அந்வயித்துக் கொள்ளவேணும். கோழிகளில் சாமக்கோழி யென்றுண்டு. அது யாமந்தோறும் கூவும். கண்ணபிரான் பரகால நாயகியோடு ஸம்ச்லேஷிக்க வருவதைப்பற்றிக் கூறும்போது "சாமக்கோழி கூவும்போது வருவேன்; மறுபடியும் அது கூவும்போது விட்டுப் பிரிவேன்" என்று ஒரு ஸங்கேதமிட்டுக் கூறியிருந்தனன். கோழிகூவுங் காலம் அணுகிவிட்டது; அப்போது பரகாலநாயகி தோழியோடு ஆனந்தமாகச் சொல்லுகிருள். கோழிகூ வென்னும்; கடல் வண்ணனை கண்ணன் வரும் பொழுதாயிற்று என்ருள். விச்லேஷகாலம் நெடுகிச் செல்வதும் ஸம்ச்லேஷகாலம் ஒரு நொடியாய்ச்செல்வதும் இயல்பாதலால் அதை நினைத்த பரகாலநாயகி ஸம்ச்லேஷகாலம் முடிந்துவிட்டதாகவே நினைத்து "கோழிகூ வென்னுமால் தோழி நானென் செய்கேன்!" என்ருள்.

இதுபோல திருப்பாவை ஸதஸ்ஸுக்களில் உபந்யாஸகர்களுக்குக் கொடுக்கிற அவகாசம் ஆரம்பமும் அவஸானமுமே தெரியும்படியாய் இருக்கு மென்னலாம். இந்த நிர்ப்பந்தத்தில் அடியேன் அகப்பட்டுக்கொள்வதில்லை. ஸதஸ்ஸில் நிர்ப்பந்தமாக அந்வயிக்க நேர்ந்தால் பலபல ஸாரார்த்தங்களைக் கொண்ட திருப் பாவையில் ஏதேனுமொரு ஸாரார்த்தத்தை எடுத்துரைத்து நின்றிடுவேன். ஒரு ஸதஸ்ஸில் கூறின ஸாரார்த்தம் கேளீர்.

## "அந்நவாந் அந்நாதோ பவதி"

தைத்திரீயோபநிஷத்தில் ஓதப்பட்டுவரும் வாக்கியமொன்று இது. ***அந்நவாந்*** என்பதற்கு அன்னமுடையவன் என்று பொருள். ***அந்நாத:*** என்பதற்கு அன்ன முண்பவன் என்று பொருள். (அந்நவாந் பவதி) என்ருல் போதும், அல்லது (அந்நாதோ பவதி) என்ருல் போதும். அன்னம் படைத்தவன் அன்னமுண்ணுமல் போவான்? அன்னம் படைப்பது எதற்காக? உண்பதற்காகத்தானே. அப்படி யிருக்க (அந்நவாந் பவதி) என்றும் (அந்நாதோ பவதி) என்றும் ஓதுவானேன்? இங்ஙனே ஓதினது மட்டுமன்று! தைத்திரீய ஸம்ஹிதையில் இரண்டாவது காண்டம் இரண்டாம் ப்ரச்நத்தில் (***அந்நவாந் ஸ்யாம்***) என்பவனுக்கு ஒரு யாகமும் (***அந்நாதஸ் ஸ்யாம்***) என்பவனுக்கு ஒரு யாகமும் அநுஷ்டேயமாகச் சொல்லிற்று. அதிலேயே மூன்ருவது காண்டம் நான்காவது ப்ரச்னத்தில் (***அந்நவாந் ஸ்யாம், அந்நாதச்ச ஸ்யாம்***) என்பவனுக்கு ஒரு யாகம் அநுஷ்டேயமாகச் சொல்லிற்று. இங்ஙனே ஓதினதன் கருத்தை நாமுணரவேணும். உணர முயலவேணும்.

"போஜ்யம் போஜநபாக்யஞ்ச நால்பஸ்ய தபஸ: ப்பலம்" என்ருன் ஒரு மஹாகவி. (போஜ்யம் போஜநசக்திச் ச) என்னும் பாடமுண்டு. அன்னம் படைத்

தவனெல்லாம் அன்னமுண்ணப் பெறுகிருனென்பது கிடையாது. மஹாதனிகர்களாயிருந்தும் க்ருபணதையால் சிலரும் ரோகாதிகளால் சிலரும் புஜிக்கப்பெருமேயிருப்பதைக் காணுநின்ரேம்.

தைத்திரீயோபநிஷத்தில் ஸைஷாநந்தஸ்ய மீமாக்ம்ஸா பவதி என்று தொடங்கி ஸ ஏகோ மாநுஷ ஆனந்த: என்றதனிடையில் ஆசிஷ்ட: என்று அசந சீலத்வமும் ஒரு பேருகப் பேசப்பட்டது. "நன்ருக உண்பவனுயிருக்கை ஒரு ஆனந்தம்" என்னப்பட்டது. அங்கு பாஷ்யத்தில் "ஏதேந ரோகாதிராஹித்யம் உக்தம் பவதி" என்னப்பட்டது. ஆதிசப்தத்தாலே கார்ப்பண்யம் கொள்ளக்கடவது.

இனி திருப்பாவைக்கு வருவோம். திருப்பாவையில் எத்தனை பாத்ரப்ரவேசங்களாயிருக்கின்றன வென்று பார்த்தால், கண்ணனையும், கோபிகளைப்பற்றியும் சொல்லவேணுமோ? நந்தகோபாலன், யசோதை, ஆழிமழைக்கண்ணன், கோயில் காப்பான், தோரண வாசல் காப்பான், நம்பி மூத்தபிரான் (பலராமன்), நப்பின்னைப் பிராட்டி ஆக இத்தனை பேர்கள் திருப்பாவையில் புகுந்திருக்கிருர்கள் இவர்களில் அதிகமான பிரவேசம் யாருக்கென்று பார்த்தால் நந்தகோபனொருவனுக்கேயாம். முதற்பாட்டில் கூர்வேல் கொடுந்தொழிலன் நந்தகோபன் பதினுரும் பாட்டில் நாயகனாய் நின்ற நந்தகோபன் பதினேழாம் பாட்டில் எம்பெருமான் நந்தகோபாலா பதினெட்டாம் பாட்டில் ஓடாத தோள் வலியன் நந்தகோபாலன் இருபத்தோராம் பாட்டில் வள்ளல் பெரும் பசுக்கள் ஆற்றப்படைத்தான் —ஆக ஐந்திடங்களில் நந்தகோபனுடைய ப்ரசம்ஸை நிகழ்ந்துள்ளது. திருப்பாவையில் இப்படிவேறொரு வ்யக்திக்கு ப்ரசுரமான ப்ரசம்ஸையில்லை யென்பது ஸ்பஷ்டம். ஸாக்ஷாத்கண்ணபிரானைப் பெற்ற பாக்கியசாலியான வஸுதேவரைப்பற்றித் திருப்பாவையில் ஓரிடத்திலாவது ப்ரஸ்தாவமுண்டோ வென்னில்; இல்லை ஒருத்தி மகனாய்ப் பிறந்து என்ற பாட்டில் தேவகிப் பிராட்டி கோப்யமாகத் தலை காட்டுகிருள்; அந்த ரீதியுமில்லை வஸுதேவர்க்கு.

(அந்நவாந் அந்நாதோ பவதி) என்கிற ச்ருதியை இப்போது எடுத்துக்கொள்வோம். வஸுதேவர் அந்நவாந் பவதிக்கு இலக்கு. நந்தகோபர் அந்நாதோ பவதிக்கு இலக்கு. வஸுதேவனென்பதற்குப் பணத்தினுல் விளங்குபவன் என்பது பொருள். நந்தகோபனென்பதற்கு ஆனந்தப் படுபவனென்று பொருள். பணம் ஓரிடத்திலும் ஆனந்தம் மற்ரேரிடத்திலுமாயிற்று. "வஸுதேவோ வஹந் க்ருஷ்ணம் ஜானுமாத்ரோதகோ யயௌ" என்று ஸ்ரீ விஷ்ணு புராணத்திற் கூறினபடி அருந்தெய்வத்தைப்பெற்ற தகப்பனே 'நந்தன் பெற்றனன் நல்வினையில்லா நங்கள் கோன் வசுதேவன் பெற்றிலனே" என்று தெய்வத் தேவகி புலம்பும்படியாகச் சீர்மல்கு மாய்ப்பாடியிலே கொண்டுவிடவேண்டியதாயிற்று. அந்நாதோ பவதிக்கு லேசத்தும் இலக்காகவில்லை. இந்த மருமத்தையும் ஒரு வேத வாக்யமே உணர்த்துகின்றது; (அதாவது)

"நாயமாத்மா ப்ரவசநேந லப்யோ ந மேதயா ந பஹுநா ச்ருதேந;
யமேவைஷ வ்ருணுதே தேந லப்ய: தஸ்யைஷ ஆத்மா விவ்ருணுதே தநூம் ஸ்வாம்"
என்பதாம். (*ஏஷ ஏவ யம் வ்ருணுதே தேந லப்ய:*) பரமபுருஷன் தானே எவனை

ஸ்வீகரிக்கிருனே, அவன்தான் பரமாத்மாவைப் பெறுபவனுவன். பெறுவதென்ருல். என்னவென்னில்; (*ஏஷ ஆத்மா தஸ்ய ஸ்வாம் தநூம் விவ்ருணுதே*) இந்த பரமாத்மா, தன்னுல் ஸ்வீகரிக்கப்பட்ட அந்த அதிகாரிக்குத் தனது திருமேனியை முற்றூட்டாக அநுபவிக்கக் கொடுக்கிருனென்கை. இழக்கைக்கு ஒரு தம்பதிகளும், எல்லாம் பெறுகைக்கு ஒரு தம்பதிகளுமாயிற்றந்தோ! ... ... ... ... ... ...

# வினவினவர்களுக்கு விடுத்த விடை

மார்கழியில் நமது அன்பர்கள் நம்மைச் சிலருடைய திருப்பாவை காலக்ஷேபங்களுக்கு அழைத்துச் சென்றுர்கள். "இவர் இந்த வருஷந்தான் திருப்பாவை சொல்லத் தொடங்கியிருக்கிருர்; எப்படியிருக்கிறதென்பதை உள்ளபடியுரைக்கவேணும்; நன்ருக இருக்கிறதா?" என்று வினவினவர்களுக்கு ஓரிடத்தில் ஸபையிலேயே நாம் விடுத்த விடையை இங்குத் தெரிவிக்கிறேம்; பேயாழ்வார் தமது திருவந்தாதியில் அருளிச் செய்கிருர் [பா–21]

"பேசுவார் எவ்வளவு பேசுவர். அவ்வளவே
வாசமலர்த்துழாய் மாலையான் – தேசுடைய
சக்கரத்தான் சங்கினன் சார்ங்கத்தான், பொங்கரவ
வக்கரனைக் கொன்ருன் வடிவு."

(எம்பெருமானுடைய ஸ்வரூப ஸ்வபாவங்கள் எப்படிப்பட்டவையென்ருல் [*பேசுவார் எவ்வளவு பேசுவர் அவ்வளவே*] பேசுகிறவர்கள் எவ்வெவ்வளவு பேசுகிருர்களோ அவ்வவ்வளவில் அடங்கி நிற்குமது). இதைச் சிறிது விவரிப்போம். எம்பெருமானைப் பற்றிப் பேசுகிறவர்கள் கலைகளெல்லாம் அறக் கற்றவர்களாயிருக்கவேணுமென்கிற நிர்ப்பந்தமில்லை. இராமாநுச நூற்றந்தாதியில் "பெரியவர் பேசினும் பேதையர் பேசினும் தங்குணங்கட்கு உரியசொல் என்றுமுடையவன் இராமாநுசன்" என்கிருர் அமுதனர். எம்பெருமானுருடைய திருக்குணங்களை ஆழ்வான் ஆண்டான் எம்பார் போல்வாரே பேசவேணுமென்பதில்லை; அற்பஞானிகள் பேசத் தொடங்கினுலும் 'மிக அழகிதாகச் சொன்னுர், இவ்வளவு யாராலும் சொல்லமுடியாது' என்று புகழும்படியாகவேயிருக்குமாம். அதேபோல, எம்பெருமானது திருக்குணங்களையும் இன்னுரினையாரென்கிற வாசியற யார் பேசினுலும் "சொல்லவேண்டிய பெருமைகளையெல்லாம் அழகாகச் சொல்லிவிட்டாரே; இன்னும் சொல்லவேண்டியது ஒன்றும் சேஷித்திருக்கவில்லையே" என்றுதான் சொல்லும்படியாயிருக்கும்—என்பது பேயாழ்வார் அருளிச் செயலின் கருத்து.

இதை அடியொற்றியே ஆளவந்தார் தமது ஸ்தோத்ரரத்னத்தில் "யத் வா ச்ரமாவதி" என்கிற சுலோகத்தில் "ஏவமேவ கலு தேபி ஸதா ஸ்துவந்த: வேதாச் சதுர்முகமுகாச் ச, மஹார்ணவாந்த: கோ மஜ்ஜதோ: அணுகுலாசலயோர் விசேஷ:" என்றருளிச்செய்தார். ஆயிரவாய் படைத்த அனந்தன் பேசினுலும் எல்லைகாண முடியாத எம்பெருமானது பெருமைகளைப் பேசுமவர்கள் பெரியவராகிலென்? சிறியவராகிலென்ன? "தங்களன்பார தமது சொல்வலத்தால் தலைத்தலைச் சிறந்து பூசிப்ப" என்று நம்மாழ்வார் ஸாதிக்கிறபடி நெஞ்சு கனிந்து யார்பேசினுலும் நன்றேயாகும்.

"*யதி புநரபிதேயமத்விதீயம்*" என்று வரவரமுநிசதகத்தில் எறும்பியப்பா ஸாதிக்கிற படி பேசுவதற்குக் கொள்ளும் விஷயம் நன்றாயிருந்துவிட்டால் வக்தாக்களைப்பற்றியும் வாக்குக்களைப்பற்றியும் விமர்சிக்கவேண்டிய ஆவச்யகதையில்லை என்று சொல்லி முடித்தேன்.

## ஒரு ஸுபாஷிதம்

அரசாணிபாலை வேங்கடாத்வரி பணித்த நூல்களில் *ஸுபாஷித கௌஸ்துப* மென்பதொன்று; அதில் ஒரு ஸுபாஷிதம்;—

"வாசாடோக்தௌ வாகம்ருதே வா ஸுகவீநாம்
ஸ்தோகப்ரஜ்ஞாஸ் துல்யத்ருசோ ஹந்தபவந்தி,
கோமாயூநாம் கோகிலயூநாமபி சப்தேஷு
ஏகாகாரா மாநஸவ்ருத்திர் மஹிஷாணாம்."

உபந்யாஸகர்களுக்கு இந்த ச்லோகம் கண்டபாடமாயிருக்கத்தக்கது. இதன் பொருளென்னவென்றால், அரட்டை பேசுமவர்கள் என்று சிலருண்டு; அமுதமொழி பொழியுமவர்களென்று சிலருண்டு; இவ்விரு வகுப்பினருடைய பேச்சையும் துல்யமாகவே பாவிப்பர் சிலர். காட்டில் ஒருபுறத்தில் குள்ளநரிகள் ஊளையிடுவதிலும் மற்றொருபுறத்தில் கர்ணாம்ருதமாகக் குயில் கூவுவதிலும் எருமைக் கடாக்களுக்கு ஒரு வாசியுணர்ச்சி இல்லையன்றோ—என்பதாம்.

ஒருவர் பேசுகிறார்—புகைவண்டியில் பயணம் செய்பவர்களில் சிலர் முதல் வகுப்பு டிக்கெட் வாங்குகிறார்கள்; சிலர் இரண்டாம் வகுப்பு டிக்கெட் வாங்குகிறார்கள், சிலர் மூன்றாம் வகுப்பு டிக்கெட் வாங்குகிறார்கள். மூன்றாம் வகுப்பு டிக்கெட் வாங்குமவர்கள் அந்த ஒருவகுப்பு வண்டியில் மட்டும் ஏறலாமேயொழிய முதல் வகுப்பு வண்டியிலோ இரண்டாம் வகுப்பு வண்டியிலோ ஏறமுடியாது. இரண்டாம் வகுப்பு டிக்கெட்வாங்கினால் அதிலும் ஏறலாம், மூன்றாம் வகுப்பிலும் ஏறலாம். ஆனால் முதல் வகுப்பில் ஏறமுடியாது. முதல் வகுப்பு டிக்கெட் வாங்கி விட்டால் எந்த வகுப்பிலும் ஏறலாம், ஆனால் ஏர்கண்டிஷனில் ஏறமுடியாது. ஏர்கண்டிஷன் டிக்கெட் வாங்கி விட்டாலும் அந்த வகுப்பிலும் ஏறலாம், முதல் வகுப்பிலும் ஏறலாம், இரண்டாம் வகுப்பிலும் ஏறலாம், மூன்றாம் வகுப்பிலும் ஏறலாம். தவிர ஒரு வேடிக்கை பாருங்கள். புகைவண்டி தண்டுவாளத்தின்மேல்தான் போகும். கப்பல்கடலில்தான் செல்லும் ஏரோப்ளான் ஆகாயத்தில்தான்பறக்கும். வண்டிகளும் ஸைகில்களும் மோடார்களும் தரையில் தான் செல்லும்.........இப்படி பலவும் பேசிக்கொண்டுபோகிறார். கேட்பர்கள் "என்ன அருமையான சொற்பொழிவு! ரங்காசாரியரும் ராகவாசாரியரும் பேசுகிறார்களே, அவர்களால் இப்படிப் பேசமுடியுமா? என்கிறார்கள்". லோகோ பிந்நருசி:."

*பத்திராதிபருடைய முக்கியமான குறிப்பு*:—எனது கண்பார்வைக் குறைவுக்கு இன்னும் பரிஹாரம் ஏற்படவில்லை. நண்பர்கள் எழுதும் கடிதங்கள் நானே நேரில் வாசிக்க வேணுமானால் விட்டுவிட்டுப் பெரிய எழுத்தில் எழுதவேண்டும். —ஆசிரியர்.



# கண்ணாவும் அண்ணாவும் பேசியவை

*(முன்னிதழ்த் தொடர்ச்சி)*

*கண்ணா*—கோவிந்தன் குணம்பாடி ஆவி காத்திருக்கு மென்னண்ணா! முப்பதும் தப்பாமே உரைத்து முடித்து வந்தாயா? அநுபவித்த விசேஷங்களையெல்லாம் எனக்குச் சொல்லுவையா?

*அண்ணா:*—கன்று மேய்த்து விளையாடும் கோவலக்கண்ணா! முன்பு நீ சொன்னதை மறந்து விட்டதல்லவா இப்படி கேள்வி கேட்கிறாய். எம்பெருமானாரைப்பற்றி அமுதனார் பேசின "உணர்ந்த மெய்ஞ்ஞானியர் யோகந்தொறும், திருவாய்மொழியின் மணந்தரு மின்னிசை மன்னுமிடந்தொறும் மாமலராள் புணர்ந்த பொன்மார்பன் பொருந்தும் பதிதொறும்புக்கு நிற்குமிராமானுசன்" என்ற பாசுரத்தையெடுத்துரைத்து அந்த ஸ்ரீராமாநுஜரைப் போலே நானும் காலக்ஷேப கூடங்களிலும் என் கதைகள் பேசப்படுமிடங்களிலும் மன்னியிருப்பேனென்று சொல்லியிருந்தாயல்லவா? அதன்படி நீ பூர்த்தியாகக் கேட்டாயல்லவா? கேட்டதையெல்லாம் சொல்லு என்று நான் கோரவில்லை; கேட்டவற்றில் சிற்சில விஷயங்களை—நீ ரஸித்தவற்றைச்சொல்லு கேட்போம்.

*கண்ணா*—என்னுடை யாருயிரான அண்ணா! நான் உன்னுடைய கோஷ்டியில் மட்டுமிருந்திலேன்; நிலவுலகில் எத்தனையூர்களில் எத்தனையிடங்களில் திருப்பாவைச் சொற்பொழிவுகள் நடந்தனவோ அத்தனையிடங்களிலும் இருந்து கேட்டவனே; அவற்றையெல்லாம் சொல்லச் சொன்னாலும் சொல்லுவேன். இப்போது நீ கேட்டவரைக்கும் உன் கோஷ்டியில் கேட்டவற்றில் சிற் சிலவே சொல்லுகிறேன்.

*அண்ணா*—அந்தமொன்றில்லாத ஆயப்பிள்ளாய்! ☼எல்லே யிளங்கிளியேயென்கிற பாசுரத்தன்றுதான் என்னிடம் நீ வந்து பேசினது; அதற்கு முன்னேயும் தொடக்கமே பிடித்து நீ கேட்டதாகச் சொல்லுவதால் அவதாரிகையிலிருந்தே சொல்லவேணுமென்று கோருகிறேன்.

*கண்ணா*—நெஞ்சுருகிக்கண்பனிப்ப நிற்கு மண்ணா! நீ சொற்பொழிவாற்றும் போது கோஷ்டியில் சிலர் குறிப்பெழுதிக் கொள்வதைக் கண்டேன். என்னைப்பற்றி நானே சொல்லிக் கொள்ளுகிறேன். ஒவ்வொன்றையும் என்னுடைய செஞ்சகம்பால் சுவர் வழி எழுதிக்கொண்டேன். அவதாரிகையில் நீ என்னைப்பற்றி ஏற்றமாகச் சொன்னதையும் சொல்லுகிறேன், தாழ்வாகச் சொன்னதையும் சொல்லுகிறேன்.

*அண்ணா*—கணக்கில் கீர்த்தி வெள்ளக் கதிர் ஞான மூர்த்தி கண்ணா! உன்னைப்பற்றித் தாழ்வாக ஒரு போதும் ஒன்றும் சொல்லமாட்டேனே; வேறு யாரோ சொன்னதை நான் சொன்னதாக மயங்கிச் சொல்ல நினைக்கிறாய் போலும். உன்னைப்பற்றித் தாழ்வாகச் சொல்ல என்ன இருக்கிறது?

*கண்ணா*—மதியெல்லா முள் கலங்கி மயங்கப்பேசு மண்ணா! மயக்கம் உனக்கே யொழிய எனக்கில்லை; கேட்டது கேட்டபடியே சொல்லுகிறேன். நீ தாழ்வு சொன்னதும் எனக்குப் பரமபோக்யமேயாகும். ஏற்றமாகச் சொன்னாயே, அதை முன்னம் சொல்லுகிறேன்.

"ஆண்டாள் திருப்பாவைக்குக் கண்ணனை இலக்காகக் கொள்ளாமல் இராமனை இலக்காகக் கொண்டிருந்தால் ஒரு சுவையுமில்லாமல் ரஸபங்கமாகவே யிருந்திருக்கும்" என்றாயல்லவா, அது மிகவும் உண்மையே. "மாஸாநாம் மார்க்கசீர்ஷோஹம்" என்று சொன்னவன் நானே யொழிய இராமனல்லன். ஆகவே மார்கழிக்குப் பெருமை என்றால் தானாகும். இஃதிருக்கட்டும். என்னைப்பற்றி நீ தாழ்வாகச் சொன்னதைச் சொல்லுகிறேன் கேள். உனக்கு நினைவிருந்தால் அதை நீயே சொல்லி விடு; மீண்டுங் கேட்டு மகிழ்கிறேன்.

*அண்ணா*—அறிவினால் குறைவில்லா அகல் ஞாலத்தவரறிய நெறியெல்லா மெடுத்துரைத்த கண்ணா! ஏதோ சொல்லுகிறேன். நீ தாழ்வாக நினைத்திருப்பது இதுதானோ? வேறொன்றோ என்பதைப் பிறகு நீ உண்மையாகச் சொல்லவேணும்.

ஒரு ஸமயம் நீ பிராட்டியிடம் பெருமையாகச் சொல்லிக் கொண்டாய்—"தசவர்ஷஸஹஸ்ராணி தசவர்ஷசதாநிச, ராமோ ராஜ்யமுபாஸித்வா" என்றபடி இராமன் பதினோராயிரமாண்டு பூலோகத்தில் வாழ்ந்திருந்தும் அத்யாத்ம சாஸ்த்ரமாக ஒன்று சொல்லி வைக்கவில்லை; நான் நூறுஸம்வத்ஸரந்தான் இந்நிலத்திலிருந்தேன்; உலகமெல்லாம் மெச்சும்படியான கீதாசாஸ்த்ரஞ் சொன்னேன். வேதத்திற் காட்டிலும் இதையே உயர்ந்ததாக உலகம் மதிக்கிறது" என்று சொல்லிக்கொண்டாய். அப்போது பிராட்டி சொன்னாள்! நாதா; நீ சொன்ன கீதைக்குப் பல குறைகளுண்டு. முரட்டு ஸம்ஸ்க்ருதத்தில் சொன்னது; மிகமிக விரிவாகச் சொன்னது; கேட்டது போதும் என்று தலை குனிந்து நின்ற அர்ஜுநனை நோக்கி "பூய ஏவ மஹாபாஹோ! ச்ருணு மே பரமம் வச:" என்றும், "இதம் து தேகுஹ்யதமம் ப்ரவக்ஷ்யாமி" என்றும் நீயே கிளப்பிக் கிளப்பிச் சொன்னது; இடையிடையில் "நமாம், துஷ்க்ருதிநோ மூடா: ப்ரபத்யந்தே நராதமா:" என்றும் "அவஜாநந்தி மாம் மூடா:" என்றும் நிந்தித்தது, ஸ்ரீமஹாலக்ஷ்மியைப் பற்றி ஒன்றுமே பேசாதது, சண்டையிடமாட்டேனென்ற வனை வலி கட்டாயப்படுத்திச் சண்டையிலே மூட்டினது; ஸகலமதஸ்தர்களும் பிடித்திழுத்துத் தங்கள் தங்களுக்கு அநுகூலமாக வியாக்கியானம் பண்ணும்படி சொன்னது; நாராயணனே பரதத்வமென்பதையும் அவன் திருவடிகளில் பண்ணும் கைங்கர்யமே புருஷார்த்த மென்பதையும் காட்டிக்கொடாதது; "நூநம் அச்ரத்ததாநோஸி துர்மேதாச்சாஸி பாண்டவ!, அபுத்த்யா யந்ந ஜாநீஷே! தந்மே ஸுமஹதப்ரியம்" என்று முடிவில் (உத்தர கீதையில்) மிக்க வெறுப்புக்காட்டினது, என்றிப்படிப்பட்ட பல குறைகளைக் கூறினாள் பிராட்டி; அப்போது நீ சொன்ன தாவது—"கட்டின வீட்டுக்குக் குறை கூறுவது போல் ஏதோ கூறுகிறாய்; ஒரு குறையுமில்லாதபடி நீ ஒரு பிரபந்தம் செய் பார்ப்போம்" என்றாய். அப்போது "ஸாக்ஷாத் க்ஷமாம் கருணயா கமலாமிவாந்யாம்" என்று போற்றப்பட்ட பிராட்டி திருப்பாவையை யருளிச் செய்து 'இதைப்பார்' என்று உன் கையில் கொடுத்தாள். நீ அதை முற்றும் வாசித்து உகந்து ஏற்றுக் கொண்டாய் என்று அவதாரிகையில்சொல்லியிருக்கிறேன் இதைத் தாழ்வுரையில் சேர்த்திருக்கிறாயோ கண்ணா!

*கண்ணா*—என்னுள்ளத்துள்ளே உறையுமண்ணா! சில அவிவேகிகள் தாழ்வாக நினைப்பர்களேயொழிய நான் நினைக்க என்ன ப்ரஸக்தி? பட்டர் எனது நாயகியை அவளுடைய கோயில் வாசலில் நின்று துதிக்கத் தொடங்கி நாலு ச்லோகங்கள் சொல்லி திடீரென்று அங்கிருந்து அஞ்சு குழி மூன்று வாசலாலே என்னிடமோடி வந்து "ச்ரியம்! த்வத்தோபி உச்சைர் வயமிஹ பணாம: ச்ருணுதராம்" [பிராட்டியை உனக்கும் மேலே தூக்கி வைத்துத் துதிக்கப் போகிறேன், கேளாய்] என்றார். அதையே நான் தாழ்வாக நினைக்கவில்லையே. நான்

சொன்ன கீதையை விட என் மனைவி சொன்ன திருப்பாவைதான் உயர்ந்தது என்கிற கொள்கை எனக்கில்லையாகில் கோவில்களில் நித்யமும் கீதையைப் பாராயணம் செய்யக் கட்டளையிட்டிருக்கமாட்டேனா? மார்கழியில் மட்டுமா திருப்பாவைக்கு ஏற்றம்? வருஷம் முந்நூற்றறுபது நாளும் திருப்பாவையைத்தானே கேட்டுக்களிக்கிறேனெங்கும்.

*அண்ணா*—என் ஆராவமுதான கண்ணா! கீதையிலுள்ள குறைகளை உன் மனைவி உன்னிடம் நேரில் எடுத்துக் கூறினாளே, அக்குறைகளெல்லாம் உண்மைதானே. அக்குறைகளில் ஒன்று கூடத் திருப்பாவையில் கிடையாதென்பதும் உண்மைதானே. குறை நிறைகளை உன் வாயால் விவரித்துரைக்கக் கேட்க ஆசைப்படுகிறேன்.

*கண்ணன்*—என்னுள்ளங்குளிரப்பேசு மண்ணா! கீதை முரட்டுஸம்ஸ்க்ருதமன்று, திருப்பாவை செவிக்கினிய செஞ்சொல்லான செந்திறந்த தமிழோசையன்று என்பேனோ? பதினெட்டு அத்யாயங்களும் எழுநூறு சுலோகங்களுமாகக்ரந்த விஸ்தாரஞ் செய்த குறையை இல்லையென்பேனோ? வேதமனைத்துக்கும் வித்தாக முப்பது பாட்டுச்சொன்ன பெருமையை மறுக்க முடியுமோ? மூடனை சிஷ்யனுக்குச் சொன்ன என்னைப்போலல்லாமல் ஸர்வஜ்ஞனென்று பேர்பெற்ற என்னையே சிஷ்யனுக்கி 'பொருள் கேளாய்' என்று உணர்த்தின அவளுடைய பெருமையை மறைக்கப் போமோ? இடையிடையில் என்னுடைய வருத்தத்தை நானே சொல்லிக் கொண்டது போலல்லாமல்* வருத்தமுந்தீர்ந்து மகிழ்ந்தென்றும் கூடியிருந்து குளிர்ந்தென்றும்நெஞ்சு கனிந்து சொன்ன அவளுடையசொல்லழகைச் சிந்தியாதிருக்க முடியுமோ? நப்பின்னை கொங்கைமேல் வைத்துக்கிடந்த மலர்மார்பா! என்று என்னையெழுப்பினவள் எனக்கு ஏற்றம் தந்த பிராட்டியை ஓரிடத்தும் ப்ரஸ்தாவியாத என்னைக்காட்டிலும் எவ்வளவோ மேம்பட்டவளல்லவா? தஸ்மாத் யுத்யஸ்வ பாரத! என்று வாய்க்குவாய் யுத்தம் பண்ணத் தூண்டினகீதையானது பாரோர் புகழவும் உய்யுமாறெண்ணியுகக்கவும் நீங்காத செல்வம் நிறையவும் எங்குந்திருவருள் பெற்றின்புறவும் சொன்ன திருப்பாவையின் முன்னே நிற்கவல்லதோ? நாராயணனுகிற பரதத்வத்தையும் கைங்கர்யமாகிற பரமபுருஷார்த்தத்தையும் பேசாதது நம் கீதையென்பதை யறியேனோ? பரமைகாந்திகளே பரிக்ரஹிக்க நின்ற திருப்பாவைக்கு கண்டபேர்களும் பிடித்திழுக்க நின்ற கீதை ஒவ்வாதுதான்; ஆயினும் அறிவினுல் குறைவில்லா அகல் ஞாலத்தவரறிய நெறியெல்லா மெடுத்துரைத்த நிறை ஞானத் தொருமூர்த்தி யென்று நம்மாழ்வாரும், ஆயன் துவரைக்கோனாய் நின்றமாயன் அன்றோதியவாக்கதனைக் கல்லார் ஏதிலராம் மெய்ஞ்ஞானமில் என்று திருமழிசைப் பிரானும் புகழ்ந்த ஏற்ற முண்டு கீதைக்கு என்று ஒருவாறு தேறுதலடைகிறேன் அண்ணா!

*அண்ணா*—வெண்சங்க மொன்றேந்திய கண்ணா! அவதாரிகையின் சர்ச்சை போதும்; முதற் பாட்டில் கேட்டவற்றில் ஏதேனுஞ் சொல்லு கேட்போம். சுருக்கமாக இரண்டொரு வார்த்தை சொன்னாலும் போதும்.

*கண்ணன்*—என் மனம் வாட நினையாத அண்ணா! முதற் பாட்டில் *மதி நிறைந்த நன்னாளால்* என்றவிடத்து மதியென்பதற்கு சந்திரனென்ற பொருளைச் சொல்லி விவரித்துவிட்டு, புத்திர்மநீஷா திஷணா தீ: ப்ரஜ்ஞா' சேமுஷீமதி:* என்கிற கோசத்தைக்கொண்டு புத்தி வாசகமான ஸம்ஸ்க்ருதபதமாகப் பேசி, அதற்குமேல் "ஸ்ம்ருதிர் வ்யதீதவிஷயா மதிராகாமிகோசரா, புத்திஸ் தாத்காலிகீ ப்ரோக்தா ப்ரஜ்ஞா த்ரைகாலிகீ மதா." என்கிற விசேஷ

வசனத்தைக் காட்டி "மதியினுல் குறள்மாணுய் உலகிரந்த கள்வற்கு" என்கிற திருவாய்மொழிப் பாசுரங்கொண்டு ஸமந்வயப்படுத்தினுய்; அதை மறுபடியும் உன் வாயில் கேட்க விரும்புகிறேன், சொல்லவேணுமண்ணு!

*அண்ணு*—கனிவார் வீட்டின்பமான கண்ணு! நம்மாழ்வார் பராங்குசநாயகியாகித் தூதுவிடுகிற அஞ்சிறையமடநாரைப்பதிகத்திலுள்ள பாசுரம் "மதியினுல் குறள் மாணுயுலகிரந்த கள்வர்க்கு" என்பது; மஹாபலிபக்கலில் மாண்குறள் கோலப்பிரானுய் யாசகம் செய்வதற்கு சென்றதானது அந்தச் செயலாலே என்போல்வாரையீடுபடுத்திக் கொள்வதற்காகவேயொழிய இந்திரனுடைய காரியஞ்செய்வதற்காகவன்று; என்பதாகவொரு சுவை மிக்கபொருள். இது *மதியினுல்* என்பதனுல் பெறுவிக்கும் பொருள் என்றேன். இது ஸாமான்ய புத்திகளுக்கு ரஸிக்கமாட்டாது. அந்த கள்வன் நீதானே, உனக்கு ரஸித்திருக்கும். அதனுல்தான் திரும்பவும் கேட்க விரும்பினுய் போலும். (தொடரும்)

# சென்னை கவர்னர் சந்திப்பு

உலகம் போற்றும் உயர்பதவியில் வாழும் சென்னை கவர்னர் உயர்திரு. K. K. ஷா (Shah) என்பவர் வேதத்தில் இயற்கையான அபிமானமுடையவர். இவர் பூனு நகரத்தைச் சேர்ந்தவராம். வேதத்தில் சில ஆராய்ச்சிகள் செய்ய முன்வந்திருப்பவரென்று தெரிகிறது. வேதத்தில் என்னுடைய ஆராய்ச்சி நூல்கள் வெளிவந்திருப்பதைக் கேள்விப்பட்ட இப்பெரியார் சென்ற மார்கழிமாதத்தில் நான் சென்னையில் வாழ்வதையறிந்து ஒருநாள் சந்திக்கவேணுமென்னுமவாவைத் தெரிவித்தார்— நமது ஸத்காலக்ஷேப ஸபைத்தலைவரான ஸ்ரீமான் ஊரா ஜகன்னுத செட்டியாரவர்கள், ஸ்ரீ உ. வே A. ஸ்ரீநிவாஸய்யங்கார் முதலானவர்களிடம். 8—1—72 மாலை 4 மணிக்கு ராஜபவனத்தில் சந்திப்பதாக நிர்ணயிக்கப்பட்டது. அன்று 4 மணி முதல் 5-15 வரை சந்தித்து வார்த்தையாட வாய்த்தது. ஸம்ஸ்க்ருத பாஷையிலும் ஹிந்தீ பாஷையிலும் நன்கு பேசப்பழகியிருக்கிருர். பரத்துவம் அடியோடு தெரியாமல் மிகவும் ஸெளம்யமாகப்பேசி மனத்தைக் கவர்ந்தார். ஸ்ரீ A. ராமாநுஜாசாரியர் B. A., C. ஸுப்ராயலு செட்டியார் Free India Editor முதலானுர் என்னுேடுகூட வந்திருந்தபடியால் அவர்களோடும் ஆங்கிலத்தில் லோகாபிராமமாகப் பேசினுர்.

வேதசப்தங்களை உச்சாரணம் செய்யும் வகையைப்பற்றியும் வைதிகபதங்களில் ஸ்வரபேதங்கள் ஏற்பட்டிருக்கும்படிகளைப் பற்றியும் சர்ச்சை செய்தார் கவர்னர். நான் வடமொழியில் இயற்றி வெளியிட்டிருந்த *பதபாட பரித்ராணம், பதபாடபரிசுத்தி, ஸ்வரபேதஸித்தாஞ்ஜனம்* முதலான சில வைதிக நூல்களைக் கையில் கொண்டு போயிருந்தபடியால் அவற்றில் நின்று சிற்சில விடங்களை வாசித்து விளக்கும்படி கட்டளையிட, ஸுபந்தபதங்களும் திஙந்தபதங்களுமான பத்தெட்டு பதங்களைப் பற்றின எனது ஆராய்ச்சிகளை வாசித்து விளக்கினேன். வடநாட்டில் தானறிந்த சில வைதிகர்களும் இவற்றை வாசிக்கச்செய்ய அவர்களுக்கு அனுப்பவேண்டுமென்று சொல்லி அந்நூல்களைப் பெற்றுக்கொண்டார். விரைவில் நான் தெரிவிக்கும்போது மீண்டும் சந்திக்கவேணுமென்று சொல்லி எங்களுக்கு விடைதந்தார். P. B. A.

## உபந்யாஸக ஸௌபாக்ய மாலையில்
## பதினைன்காவது ஸ்தபகம்

# 8. ஸஹஸ்ரநாமராமாயணம்.

"ராமாவதாரமென்றால் பட்டர் போர பக்ஷபதித்திருப்பர்" என்று நம் ஆசார்ய கோஷ்டியில் ஸுப்ரஸித்தமாகையாலே ஸ்ரீராம பக்ஷபாதியான பட்டர் தம்முடைய ஸஹஸ்ரநாமபாஷ்யத்தில் ✳ராமோ விராமோ விரத: ✳ இத்யாதி திரு நாமங்களுக்கு முன்னே "பரர்த்தி: பரமஸ்பஷ்ட:" என்னுமிடத்தில் "அத ம்ருதஸஞ்ஜீவநம் ராமசரிதம்" என்றருளிச் செய்துள்ளார். (பரர்த்தி:) என்கிற திருநாமம் முதலாக ம்ருதஸஞ்ஜீவினியான ராமகதை சொல்லப்படுகிறது என்றபடி. பரர்த்தி:, பரமஸ்பஷ்ட: துஷ்ட: புஷ்ட: சுபேக்ஷண: ராம: விராம: விரத: மார்க்க: நேய: நய: அநய:, வீர: சக்திமதாம் ச்ரேஷ்ட: தர்ம: தர்மவிதுத்தம:—என்கிற பதினாறு திரு நாமங்களும் ராம சரித்திரங்களைத் தெரிவிப்பனவாகத் திருவுள்ளம் பற்றினபடி. இத்திருநாமங்களை விவரிக்கும் முகத்தால் ஸ்ரீராம குணாநுபவம் செய்கிறேன். ஆகவே இக் கட்டுரைக்கு 'ஸஹஸ்ரநாமராமாயணம்' என்று மகுடமிட்டேன்.

## 1. பரர்த்தி: என்ற திருநாம விவரணம்

—பரர்த்தி:= 'பரா ருத்தி: யஸ்மிந் ஸ: ருத்தியாவது ஸம்ருத்தி மிக்க ஸம்ருத்தியையுடையவனென்றபடி. செல்வம் மல்கியிருப்பவனென்கை. ஆழ்வார்கள் பலவிடங்களிலும் ✳செல்வம் மல்கு குடித் திருவிண்ணகர் ✳செல்வம் மல்கி யவன்கிடந்த திருக்கோளூர் *செல்வம் மல்கு தென்திருக்குடந்தை✳ என்றாப்போலே யருளிச்செய்கிறார்கள்; இவ்விடங்களில் கல்யாணகுண ஸம்ருத்தியையே முக்கிய மான செல்வமாக வியாக்கியானித்தருளுகிறார்கள். "பவாந் ஸர்வத்ரைவ து அகணித மஹாமங்கலகுண:" என்று ஆழ்வானருளிச்செய்தபடி எம்பெருமானுடைய ரூபங்களெல்லாவற்றிலுமே குணபூர்த்தி குறையற்றிருந்தாலும் ஸ்ரீராமாவதார மொன்றில்தான் குணபௌஷ்கல்யம் விசேஷித்துக் காணலாயிருக்கும். ஸ்ரீராமாயணத்தில் கயிறுபோட்டு எந்த இடமெடுத்தாலும் அவ்வவ்விடமெல்லாம் குணகீர்த்தன ப்ரசுரமாகவே காணலாகும். ஸ்ரீராமாயணத்தின் உபக்ரமமே குணங்களைப்பற்றின வினாவிடை. சக்ரவர்த்தி திருக்குமாரனை முடிசூட்டித் தான் தவம் புரியப் போவதாக அறுதியிட்டு மஹாஸபைகூட்டி ப்ரஜைகளின் அபிப்ராயத்தை வினவும்போது "அநேகவர்ஷஸாஹஸ்ரோ வ்ருத்தஸ் த்வமஸி பார்த்திவ!"—கிழவா! ஒழிந்து போ, கிழவா! ஒழிந்து போ என்றார்கள். பிறகு சக்ரவர்த்தி பிரஜைகளை நோக்கிக் கேட்கிறான். 'உங்களைக் கேளாமலே நான் வஸிஷ்டாதிகளோடு மட்டும் கலந்து முடிவு செய்யலாமாயிருக்கச் செய்தேயும் உங்களுக்கொரு பெருமை கொடுக்க வேண்டிக் கேட்டேன்; நீங்களும் பெருந்தன்மையுடன் விடை கூறியிருக்கலாம். 'உமக்கு இஷ்டமானபடி செய்க' என்று விநயமஸ்ருணமாகச் சொல்லியிருக்கலாம். அதைவிட்டு, இதுவரையில் நான் அதர்மராஜ்யம் செய்ததுபோலவும், நீங்கள் என்னைவிட்டு நீங்குவதற்கு ஸமயம்பார்த்திருந்தது போலவுங் காட்டி என்

னிடத்திலே மிக்க வெறுப்புத் தோற்றப் பேசினீர்களே, நான் செய்த தவறென்ன? என்று கேட்க. அதற்குப் பிரஜைகளின் விடை யாதெனில்; [பஹவோ ந்ருப! கல்யாண குணா: புத்ரஸ்ய ஸந்தி தே] மஹாப்ரபோ! உம்மிடத்தில் ஒரு குறைகண்டு சொன்னோமல்லோம்; நீர் பெற்ற பிள்ளை *குணநாமாகரோ மஹான்* என்னும்படியிருக்கையாலே அவன் கோற்கீழே வாழவேணுமென்னுமாசையொழிய வேறில்லை என்றார்கள். ஸ்ரீராம குணங்களை வாயாரச் சொல்லிச் சொல்லிக் கண்ணீர் பெருக்குகிறார்கள். (அயோத். இரண்டாவது ஸர்க்கம் காண்க.) இங்ஙனே காண்டந்தோறும் ராமகுணங்கள் ஸர்க்கம் ஸ்ர்க்கமாக ஒவ்வொருவர் முகமாய்ப் பேசப்படுகையாலே இப்படிப்பட்ட குணஸம்ருத்தியையிட்டுப் ப்ரந்தி: என்கிறது. இனி "பரேஷாம் ருத்திரேவ (ஸவஸ்ய) ருத்தி: யஸ்ய" என்று கொண்டு பரஸம்ருத்தியே பேறாயிருப்பவன் இராமன் என்றுங் கொள்ளத்தகும். ஸுக்ரீவ விபீஷணாதிகளுக்குப் பட்டாபிஷேகம் நடத்திவைக்காமல் தான் முடிசூடுவதில்லை யென்றிருந்தபடியால் இத்திருக்குணம் நன்கு விளங்கும். "த்வயி கிஞ்சித் ஸமாபந்நே கிம் கார்யம் ஸீதயா மம" என்றவிடம் பரஸம்ருத்தியையே பேணுமவர் பெருமாள் என்பதற்கு முக்கியமான சான்றாகும். லங்காத்வாரத்தில் பெருமாள் எழுந்தருளி நிற்கச்செய்தே ராவணன கோபுரசிகரத்திலே வந்து தோற்றினவாறே 'ராஜத்ரோஹியான பையல் பெருமாள் திருமுன்பே நிற்கையாவதென்?' என்று ஸுக்ரீவமஹாராஜர் அவன் மேலே யெழப்பாய்ந்து வென்று வந்தபோது பெருமாள் அருளிச்செய்கிறார் [ஏவம் ஸாஹஸ யுக்தாநி ந குர்வந்தி ஜநேச்வரா:] சிலர்மேல் விழவேண்டினால் பரிகரபூதரையன்றோ ஏவவேண்டுவது; தலைவராயிருப்பாரோ மேல்விழுவது? [த்வயி கிஞ்சித் ஸமாபந்நே கிம்கார்யம் ஸீதயா மம?] பிராட்டியைப் பெறுவதற்காகவன்றோ நாம் இத்தனை பாடுபடுவது; உம்முடைய பெருமைக்கு ஒரு குறை விளையுமாயின் அந்தப் பிராட்டியினால் தான் எனக்கென்ன? என்று இங்ஙனே சொன்ன பெருமாள் பரஸம்ருத்திக்கு விரோதமின்றியிலே ஸ்வஸம்ருத்தியைப் பேணுமவரென்று விளங்க நின்றதாயிற்று. இத்திருநாமத்தை இன்னமும் விவரிக்கலாம். போதும்.

## 2. பரமஸ்பஷ்ட: என்ற திருநாமத்தின் விவரணம்

* ந சக்ஷுஷா பச்யதி கச்சநைநம் * ந மாம்ஸ சக்ஷுரபிவீக்ஷதே தம் * *என்றேனும் சட்கண்ணால் காணாதவவ்வுரு* இத்யாதிப்படியே ஒருவர் கண்ணுக்கும் காணவொண்ணாதிருந்த வடிவத்தை அனைவரும் கண்டுகளிக்கும்படி மிகவும் ஸ்பஷ்டமாக்கிக் கொடுத்தவ னென்கை. ஆழ்வான் அதிமாநுஷஸ்தவத்தில் (10) "க்ஷோதீயஸோபி ஹி ஜநஸ்ய க்ருதே க்ருதீ த்வம் அத்ராவதீர்ய நநு லோசநகோசரோபூ:" என்றருளிச் செய்ததை இங்கே அநுஸந்திப்பது. பரமஸ்பஷ்ட: என்பதற்கு-பரமத்வம் ஸ்பஷ்டமாயிருக்கப் பெற்றவர் என்கிற பொருள் பட்டருடைய பாஷ்யத்தில் விளங்குமது. 'பரத்துவத்தை யொளித்து வந்து அவதரித்திருக்கச் செய்தேயும் அது சிலர்க்கு ஸ்பஷ்டமாக விளங்கா நின்றதென்பதை ஸ்ரீராமாயணத்திலறிகிறோம். பெருமாளுடைய வநவாஸப்ரஸங்கத்தில் கிலேசப்படா நின்ற கௌஸல்யாதேவியைத் தேற்றுகின்ற ஸுமித்திரை "ஸூர்யஸ்யாபி பவேத் ஸூர்ய: ஹ்யக்நே: அக்நி: ப்ரபோ: ப்ரபு:" தைவதம் தேவதாநாஞ்ச" இத்யாதியாலே பெருமாளுடைய பரத்துவத்தைத் தான் ஸ்பஷ்டமாகக் கண்டறிந்து பேசுகிறாள். இராவணன்

மாண்ட பிறகு ப்ரேத பூமியிலே வந்து புலம்புகின்ற மந்தோதரி *வ்யக்த மேஷ மஹாயோகீ பரமாத்மா ஸநாதந:, அநாதி மத்யநிதந:.........தமஸ: பரமோ தாதா சங்கசக்ர கதாதர:. ஸ்ரீவத்ஸவக்ஷா நித்யஸ்ரீ: அஜய்யச் சாச்வதோ த்ருவ: மாநுஷம் ரூபமாஸ்தாய விஷ்ணுஸ் ஸத்ய பராக்ரம:.* இத்தியாதியாலே பெருமாளுடைய பரத்துவத்தை அதிஸ்பஷ்டமாகக் கண்டு பேசுகிருள். பம்பாதீரத்தில் முதன்முதலாகப் பெருமாளைக் காணவந்த திருவடி "ஆயதாச் ச ஸுவ்ருத்தாச் ச பாஹவ: பரிகோபமா:, ஸர்வபூஷண பூஷார்ஹா: கிமர்த்தம் ந விபூஷிதா: ?*" என்று கேட்கிருர். இங்கு 'ஆயதௌ ச ஸுவ்ருத்தௌ ச பாஹூ தே பரிகோபமௌ' என்று த்விவசனமாக சுலோகம் கூடுமதாயிருக்க பஹுவசன மிட்டுச் சொன்னதுபற்றி கோவிந்தராஜர் எழுதுகிருர்.—ஹநுமதோ பக்தத்வேந தஸ்ய சதுர்ப்புஜவேஷேண த்ருச்யோபவத்" என்று (அதாவது) திருவடி பரம பக்தராகையாலே அவர்க்கு நிஜரூபத்தைக்காட்டினுரேன்றபடி. அன்றியும் ஸமுத்ர சரணுகதி ப்ரகரணத்தில் பெருமாள் தலையணையாக வைத்துக்கொண்ட பாஹுவை வருணிக்கின்ற வான்மீகிமுனிவர் "பூஜை: பரமநாரீணும் அபிம்ருஷ்ட மநேகதா" என்கிருர். இங்கு பரமநாரிகளாகச் சொன்னது ஸ்ரீதேவீ பூதேவீ நீலாதேவிகளை யென்று வியாக்கியானம். ஆகவே வான்மீகி முனிவரும் பெருமாளுடைய பரத்வவேஷத்தை ஸ்பஷ்டமாகக் கண்டவரென்று விளங்கும். ஆக இவ்வளவால் பெருமாளுடைய பரமஸ்பஷ்டத்வம் நிரூபிதமாயிற்று. ... ... ... *

## 3 துஷ்ட: என்ற திருநாமத்தின் விவரணம்

துஷ்ட : என்றது ஸந்துஷ்ட: என்றபடி. பெருமாளவதாரத்தைப் பேசுகின்ற நம்மாழ்வார் *நாட்டில் பிறந்து படாதனபட்டு மனிசர்க்காய்* என்கிருர். "கர்மவச்யர்களான ஸம்ஸாரிகளும் படாத கஷ்டங்களை யெல்லாம்பட்டு" என்கிருர்கள் வியாக்க்யாதாக்கள். "துக்க ஸம்வேதநாயைவ ராமே சைதந்ய மாஹிதம்" [உத்தரராமசரிதே.] என்று பெருமாள் தாமே சொன்னதாக பவபூதிகவி யெழுதுகிருர். இவற்றுல் பெருமாளுடைய திருவுள்ளம் ஸந்தோஷமற்றிருக்கும் போலு மென்று நினைக்க இடமுள்ளது. உண்மை அப்படியில்லை. ஸம்ஸாரிகளின் ஸமுஜ்ஜீவனுர்த்தமாக வந்து அவதரிக்கப் பெற்றோமிறே யென்று திருவுள்ள முகந்தேயிருப்பர். முடி புனைந்து நாட்டையாளப் பாரித்திருக்கையில் சடை புனைந்து மரவுரி யுடுத்துக் காட்டுக்குச் செல்ல நியமனம் பெற்றபோது எவ்வளவோ துக்கமாகத் தானே யிருந்திருக்குமென்று பலர் நினைக்கக்கூடும் அப்போதும் பரம ஸந்தோஷத்தையே யாயிற்று பெருமாள் கொண்டது. *ராஜ்யம் வா வநவாஸோ வா வநவாஸோ மஹோதய:" என்றவரன்றோ பெருமாள். இவ்விடத்தில் கம்பருடைய வாக்கு மிக வற்புதமானது. "இப்பொழு தெம்மனோரால் இயம்புதற்கெளிதோ? யாரும் செப்பருங் குணத்திராமன் திருமுகச் செவ்வி நோக்கின். ஒப்பதே முன்பு பின்பு வாசக முரைக்கக் கேட்ட, அப்பொழுதலர்ந்த செந்தாமரையினை வென்ற தம்மா" என்பது அவருடைய ஆச்சரியமான செய்யுள் வனவாஸக் கட்டளை பெறுவதற்கு முன்னே இராமபிரானுடைய திருமுக மண்டலம் தாமரை போன்றிருந்ததாம்; அக்கட்டளை பெற்றவாறே அத்திருமுகம் அப்போதலர்ந்த செந்தாமரையை வென்றிட்டதாம். கொடிய வனம் போக நேர்ந்ததே யென்று சிறிதும் சோகியாமல்,

புண்ணிய புனல்களாடவும் புண்ணிய புருஷர்களைத் தொழவும் வாய்ப்பு கிடைத்தமைக்குப் பரம ஸந்தோஷ மெய்தினனென்கை. *உத்ஸவேஷு ச ஸர்வேஷு பிதேவ பரிதுஷ்யதி* என்று பௌரஜனங்கள் நேரில் கண்டு சொன்னபடியே தனது நாட்டிலுள்ளவர்களுக்கு நேரும் ஸந்தோஷத்தைத் தன்னுடைய ஸந்தோஷமாகக் கொண்டு மகிழ்பவன். "அபிஷிச்ய விபீஷணம் விஜ்வர: ப்ரமுமோத ஹ' என்கிறபடியே அன்பர்களை ஸந்தோஷப்படுத்தித் தான் ஸந்தோஷாதிசய மடைபவன்.... *

## 4. புஷ்ட: என்ற திருநாமத்தின் விவரணம்

கீழே துஷ்ட: என்கிற திருநாமத்தினல் சொன்ன ஸந்துஷ்டதையை நன்கு நிலைநாட்டுகின்றது இந்தத் திருநாமம். தான் அடையும் ஸந்தோஷம் வடிவிலே காணலாம்படி யிருப்பவன். 'உள்ளத்தின் மகிழ்ச்சி உடலிலே தெரியும்' என்பராதலால் ஹ்ருதயகதமான ஸந்தோஷத்தைத் திருமேனி கோட்சொல்லித் தரக்கடவதாயிருக்கும். வனவாஸக் கட்டளை ப்ராப்தமானது "வநவாஸோ மஹோதய:" என்று சொன்னது க்ருத்ரிமமென்று நினைக்கவொண்ணுதபடி திருமேனி புகர்த்துக் காட்டுமென்கை. வனவாஸம் ப்ராப்தமாவது பரம ஸந்தோஷத்திற்கே ஹேதுவென்று சொன்னதைச் சிறிது சோதிக்குமளவில் அது அஹ்ருதயோக்தியே யொழியே ஸஹ்ருதயோக்தி யன்றென்று அறுதியிடலாமா யிருக்கும். (எங்ஙனேயென்னில்) மேலே ஆரண்யகாண்டத்தில் ஸீதாவியோகம் நேர்ந்தபோது துக்கபரவசராய்க் கதறுகின்ற பெருமாள் *ராஜ்யாத் ப்ரம்சோ வநே வாஸோ நஷ்டா ஸீதா ஹதோ த்விஜ:, ஈத்ருசீயம் மமாலக்ஷ்மீ: நிர்தஹேதபி பாவகம்.* என்று சொல்லிப் புலம்புகிறார். 'ஐயோ! ராஜ்யத்தை யிழந்தேனே! காட்டிலே வந்து வஸிக்கவும் நேர்ந்ததே!' என்று சொல்லுவது 'வநவாஸோ மஹோதய:, என்றதற்கு நேர்முரணல்லவா? வனவாஸக்கட்டளை ஸந்தோஷகரமா யிருந்தால் 'ராஜ்யாத் ப்ரம்ச:' என்றும் 'வநேவாஸ: என்றுஞ் சொல்ல வாயெழும்புமோ? ஈத்ருசீயம் மம அலக்ஷ்மீ:' என்று ராஜ்யப்ரம்ச வனவாஸங்களை தௌர்ப்பாக்ய மாகவன்றே சொல்லுகிறார். இவை பொருந்தும்படி எங்ஙனேயென்று விசிகித்ஸை பண்ணுவர்கள். இதற்கு நம்பிள்ளை யருளிச்செய்வது பாரீர்;

> "*ராஜ்யநாசோபகர்ஷதி* வநவாஸோ மஹோதய:* என்று சொல்லிப் போந்தவற்றை இப்போது அனர்த்தமாகச் சொல்லுகிறதென்னென்னில், ஆச்ரித ஸம்ச்லேஷத்துக்கும் ரிஷிகளை நோக்குகைக்கு மென்றிறே போந்தது; அத்தோடே விரோதிக்கையாலே சொல்லுகிறார். பிராட்டியைப் பிரிகையாலும் பெரியவுடையாரை யிழக்கையாலும் இவற்றுக்கு அடியானவையும் இப்போது அனர்த்தமாகத் தோற்றினபடி."

என்பது நம்பிள்ளை ஸ்ரீஸூக்தி. (இதைச் சிறிது விவரிக்கிறேன்) வனத்திற்குப் புறப்படும்போது எதனல் ஸந்தோஷமென்னில்; பிராட்டியோடு ஏகாந்தவாஸம் பண்ணப் பெறுவோம், பரமபாகவதர்களோடே ஸஹவாஸம் பண்ணப்பெறுவோம் என்றிங்ஙனே பாரித்ததனல் ஸந்தோஷமுண்டாயிற்று. பாரித்தபடியே பேறு கிடைத்து வந்தது. *வைதேஹி! ரமஸே கச்சித் சித்ரகூடே மயா ஸஹ* என்று வாய் வெருவும்படி பிராட்டியோடே கூடியிருந்து குளிரப்பெற்றது. *இஹ வத்ஸ்யாமி

ஸௌமித்ரே! ஸார்த்தமேதேந பக்ஷிணா* என்று ஜடாயு மஹாராஜருடைய சிறகின் கீழே யொதுங்கி வர்த்திக்கவும் பெற்றது. இந்த நிலைமையில் "ஹா ஹந்த ஹந்த நலிநீம் கஜ உஜ்ஜஹார" என்னும்படியாகப் பிராட்டியைப் பிரியவும் ஜடாயுமஹா ராஜரை அறவே யிழக்கவும் நேர்ந்தது. துக்கம் சொல்லுவித்த வார்த்தை யன்றோ "ராஜ்யாத் ப்ரம்சோ வநே வாஸ:" என்பது, இதனால் காட்டுக்குப் புறப்படும் போதே ஸந்தோஷமில்லாமல் வருந்தியே புறப்பட்டதாக எண்ணத்தகுமோ? பரம குதூஹலத்தோடு மஹோத்ஸவம் ஸேவிக்கத் திருவேங்கடமலை சென்றவர் அங்கு இடமும் சோறும் தண்ணீரும் பெறுமல் அப்பன் ஸேவையும் பெறுமல் வெயிலி லும் மழையிலும் பரிதபித்துக் கிடக்க நேர்ந்ததென்று கொள்வோம்; அப்போது 'ஏதுக்கு வீட்டைவிட்டு இங்கே வந்து வருந்துகிறோம்!' என்று தளர்ந்தால் இதனால் ஊரைவிட்டுப் புறப்படும்போதிருந்த குதூஹலத்தை இல்லைசெய்யவொண்ணுமோ? இலங்கை சென்ற திருவடி அசோகவனத்தில் பிராட்டியைக் கண்டவாறே "அநயா ஹீந: ப்ரபு: தாரயதி ஆத்மநோ தேஹம் ந சோகேந அவஸீததி' என்று சொன்னது பெருமாளை கர்ஹிக்குமாபோலே யிருந்தாலும் (புஷ்ட:) என்னுமிந்தத் திருநாமத்தை வியாக்கியானம் பண்ணுமாபோலவே யிராநின்றது 'வாடாமல் வதங்காமல் புஷ்ட ராகவே யிருக்கிறார் பெருமாள்' என்று காட்டினபடியாகக் கொள்ளலாம். இல்லை யாகில 'ஜீவதி' என்று மூன்றெழுத்தோடே முடிக்கலாமே; 'தாரயதி ஆத்மநோ தேஹம்' என்ற விரிவு தேஹபுஷ்டியை அந்தரங்கமாகக் காட்டவே போலும். ... *

## 5. சுபேக்ஷண: என்ற திருநாமத்தின் விவரணம்

பெருமாளுடைய திருக்கண்ணழகிலே யீடுபட்டவர்கள் சக்ரவர்த்தியும் சபரியும் திருவடியுமாவர்கள். 'என் வேள்வியைக்காக்க உன் பிள்ளையைப் போரவிடாய்; என்று விச்வாமித்ர முனிவன் வேண்டினபோது *ஊநஷோடசவர்ஷோ மே ராமோ ராஜீவலோசந:* என்று விடையிறுத்த சக்ரவர்த்தியின் கருத்துகள் பலவுண்டு' அவற்றுள் ஒரு கருத்து—இக்கண்ணழகனை விட்டுப் பிரிந்து எங்ஙனம் தரித்திருப்பே னென்கை: சபரி தன்னாச்ரமத்தேறப் போந்த பெருமாளைக் கண்டவாறே *சக்ஷுஷா தவ ஸௌம்யேந பூதாஸ்மி ரகுநந்தந!* என்று அவருடைய கண்ணழகிலே தான் ஈடுபட்டமையைத் தெரிவித்துக்கொண்டாள். இவற்றுக்கெல்லாம் மேம்பட்டது திருவடியின் வார்த்தை அதாகிறது [ராம: கமலபத்ராக்ஷ: ஸர்வஸத்வமநோஹர:*] திருவடி யோடு ஸம்பாஷணை செய்யும் பிராட்டி "யாநி ராமஸ்ய சிஹ்நாநி...தாநி பூயஸ் ஸமாசக்ஷ்வ ந மாம் சோக: ப்ரதக்ஷ்யதி" என்று பெருமாளுடைய அடையாளங்களைச் சொல்லும்படி கேட்டவாறே முந்துறமுன்னம் "ராம: கமல பத்ராக்ஷ:" என்றான். அக்கண்ணழகு செய்யுமது என்? என்ன; [ஸர்வஸத்வமநோஹர:] பிராணிகளென்று பேர் பெற்றாரெல்லாருடையவும் நெஞ்சைக் கொள்ளைகொள்ளுமதாயிற்று அவ்வழகு என் கிறார் திருவடி. இங்கே விமர்சிக்கவேணும்; திருவடி பெருமாளுடைய கண்ணழகை ஒரு பெரிய நகரத்திலே கண்டாரல்லர். நிர்ஜநமானதொரு வனத்திலே ஒரு மூலையிலே கண்டு வைத்து 'ஸர்வஸத்வ மநோஹர:, என்று எதுகொண்டு சொல்லிற்றென்று ஆராயவேணும். இங்கு நம்பிள்ளை யருளிச் செய்வது, "திர்யக் ஜாதீயனாய்ப் பணையோடு பணைதத்தித் திரிகிற என்னுடைய நெஞ்சையும் அபஹரித்ததே" என்று இத்தால் பெருமாளுடைய கண்ணழகு ஸர்வ ஸத்வமநோஹர மென்னுமிடம்

கைமுதிக ந்யாயஸித்தமென்கை. இதைக்கணிசித்தே கம்பர், அனுமன் இராம பிரானைக் காணும்போதே " மஞ்செனத்திரண்ட கோலமேனிய !, மகளிர்க்கெல்லாம் நஞ்செனத் தகையவாகி நளிரிரும்பனிக்குத் தேம்பாக், கஞ்சமொத்தலர்ந்த கண்ண !'' என்று கூறினதாகப் பாடினர். (சுபேக்ஷண :) இதற்கு பாஷ்யமருளிச் செய்யாநின்ற பட்டர் " ஸ்வகர்த்ருகம் ஸ்வகர்மகஞ் ச தர்சநம் அதிசுபம் அஸ்ய '' என்பதோர் அர்த்தமு மருளிச்செய்கிறுர். இராமனைப் பிறர் காண்பதும் இனிது, இராமன் பிறரைக் காண்பதும் இனிது என்றதாயிற்று. ஈக்ஷண சப்தமானது கண் என்கிற பொருளையும், காண்கையென்கிற பொருளையும் காட்டவல்லது. கண் என்கிற பொருளைக்கொண்டு கீழே விவரணம் செய்தேன். இப்போது காண்கையென்கிற பொருள்கொண்டு விவரிக்கிறேன். [*யச் ச ராமம் ந பச்யேத் து யஞ்ச ராமோ ந பச்யதி. நிந்திதஸ் ஸ வஸேல்லோகே ஸ்வாத்மாப்யேநம் விகர்ஹதே *] (ஸ்ரீ ரா. அயோ. 17-14) இராமனைக் காணுதவனும் இராமனுல் காணப்படாதவனும் உலகில் நிந்திக்கப்பட்டவனுவன் ; உலகத்தார் நிந்திப்பது கிடக்கட்டும் ; தன்னைத்தானே நிந்தித்துக் கொள்ளவேண்டியதுமாகும் என்றபடி. இதனுல் இராமனைக் காண்பதுபோல இராமனுல் காணப்பெறுவதும் புருஷார்த்தமென்று தேறுவதால் சுபேக்ஷண : என்பதற்கு இருவகைப் பொருளையும் பட்டர் திருவுள்ளம் பற்றினது சாலச் சிறக்கும். இந்த சுபேக்ஷண மஹார்த்த ப்ரஸ்தாவத்தில், அசோகவனத்தில் புலம்பாநின்ற பிராட்டி " தம் பத்மதளபத்ராக்ஷம் ஸிம்ஹ விக்ராந்த காமிநம். தந்யா : பச்யந்தி மே நாதம் க்ருதஜ்ஞம் ப்ரிய வாதிநம்.'' என்று சொன்ன விந்த சுலோகமும் சிந்தைசெய்யத் தக்கது. இதில் பத்மதளபத்ராக்ஷ மென்றுள்ளது. இங்கு பத்மதளமென்றோ பத்மபத்ரமென்றோ ஒன்று சொன்னுல் போதும்; " பத்ரம் பலாசம் ச்சதனம் தளம் பர்ணம் ச்சத : புமாந் '' என்ற அமரகோசத்தின்படி தளம் பத்ரம் என்பன பர்யாயமே யாதலால் தளபத்ராக்ஷ மென்று இரண்டையும் கூட்டிச் சொன்னது புநருக்தமாகாதோவென்று சிலர் சங்கிப்பதுண்டு. சங்கை யுக்தமானதே. இங்குப் பெரியார் கூறும் ஸமாதானம் சுவை மிக்கது. வடமொழியில் அக்ஷமென்கிற சொல்லுக்கு " அக்ஷமிந்த்ரிய காயயோ :'' என்கிற நிகண்டின்படி கண்ணென்றும் வடிவென்றும் இருபொருள் களுள்ளமை ப்ரஸித்தம். இரட்டுறமொழிதலென்னும் தமிழ் மரியாதையினுல் பத்மதளபத்ராக்ஷ மென்றவிவ்விடத்தில் அக்ஷபதத்திற்கு இவ்விரண்டு பொருள்களையுங் கொண்டு 'பத்மதளம் போன்று விசாலமான கண்ணழகுடையவர், பத்மபத்ரம் போன்ற [தாமரையிலை போல் பசுமையுள்ள) திருமேனியையுடையவரென்றதாகக் கொள்ளக்கடவது. நம்மாழ்வார் திருவாய்மொழியில் * செக்கமலத்தலர்போலுங் கண்கைகால் செங்கனிவாய், அக்கமலத்திலை போலுந் திருமேனி* என்றருளிச் செய்தது மேலே விவரித்த பொருளைத் திருவுள்ளம் பற்றியே.

## 6 ராம: என்ற திருநாமத்தின் விவரணம்

'ரமதே' இதி ராம : ரமு-க்ரீடாயாம் என்று தாதுவாகையாலே விளையாடு பவன் என்று பொருள்படும். " த்வம் ந்யஞ்சத்பிருதஞ்சத்பி : கர்மஸூத்ரோப பாதிதை : ஹரே ! விஹரஸி க்ரீடாகந்துகைரிவ ஜந்துபி :'' என்று நாரத முனிவர் கூறினபடியே, சிறுவர்கள் பந்துகளைக் கொண்டு விளையாடுமாபோலே எம்பெருமான் பிராணிகளை வைத்துக்கொண்டு விளையாடுகிறுன். பந்தானது வெளுப்பு நூல்

கறுப்பு நூல் சிவப்பு நூலாகிய மூன்று நிற நூல்களாலே கட்டப்பட்டிருப்பது போல பிராணிகளும் ஸத்வரஜஸ்தமஸ்ஸுக்களாகிற மூன்று நிறமுள்ள குணங்களமைந்திருப்பர்கள். பந்தானது விஹாரகாலத்தில் மேலே போவதும் கீழே விழுவதுமாயிருப்பதுபோல, பிராணிகளும் "தே தம் புக்த்வா ஸ்வர்க்க லோகம் விசாலம் க்ஷீணே புண்யே மர்த்யலோகம் விசந்தி" என்கிறபடியே மேலே போவதும் கீழே விழுவதுமாயிருப்பர்கள். இங்ஙனே விளையாடும் பரமபுருஷன் இராமனாகத் திருவவதரித்து "ராமஸ் து ஸீதயா ஸார்த்தம் விஜஹார பஹூந்ருதூந்" என்றுவான்மீகி பேசும் பிராட்டியொருத்தியோடு விளையாடினான். "ராமஸ் ஸ ஸீதயா ஸார்த்தம்" என்னாதே (ராமஸ்து) என்றது ஸாபிப்ராயம். (து) என்னுமவ்யயம் வ்யாவ்ருத்தியைச் சொல்லும். இதுவரையில் பெருமாள் பித்ரு சுச்ரூஷையிலும் தர்மப்ரவர்த்தனத்திலும் தேவதா ஸமாராதனத்திலும் புகழ்படைத்திருந்தவர் இப்போது பிராட்டியோடே சேர்ந்தவாறே வேறுபட்டார். ச்ருங்கார கேளிகளிலே பரம ரஸிகரென்று புகழ்பெற்றபடியைச் சொல்லுகிறது ... ... ...

அன்றியே, ராம:—ரமதே என்பதற்கு உள்ளம் குளிரப் பெறுபவரென்பதும் பொருளாகையாலே அப்பொருளைக் கொண்டு அநுபவிப்பதும் பாங்கு. அன்பர்களோடு கலக்கப் பெற்றும் அன்பர்களின் காரியத்தைத் தலைக்கட்டியும் உள்ளம் குளிருபவர் பெருமாள். [குஹேந ஸஹிதோ ராம:] ராமன் குஹனோடு சேர்ந்தானென்று இதற்குப் பொருளன்று; குஹேந ஸஹிதஸ் ஸந் ராம:—குஹனோடு சேர்ந்த பின்பு ராமனானென்றே ஆசாரியர்களருளிச் செய்வது. குஹனோடு சேர்ந்து உள்ளங்குளிர்ந்தானென்கை. மற்றோரிடமுங் காணலாம்; [க்ருத்வா க்ருத்யஸ் ததா ராம:]* *அபிஷிச்ய ச லங்காயாம் ராக்ஷஸேந்த்ரம் விபீஷணம், க்ருதக்ருத்யஸ் ததா ராம:* விபீஷணனும் வானுக்கு முடிசூட்டித் தன் காரியம் தலைக்கட்டிற்றாக நினைத்து [ததா ராம: அப்போது தான் ரதியை யடைந்து ராமனாயினனென்கை. பெருமாள் செய்தருளின ஒவ்வொரு காரியமும் அவர் தம்முடைய திருவுள்ளத்தைக் குளிரச் செய்ய வல்லதே யாயிற்று. குஹஸுக்ரீவ மாருதி விபீஷணாதிகள் பக்கலிலே காட்டின அநுக்ரஹ விசேஷத்தினால் திருவுள்ளம் குளிர்ந்தது போல, தாடகாதாடகேயவிராத கரதூஷண ராவணாதிகள் பக்கலிலே காட்டின நிக்ரஹத்தினாலும் ஆச்ரித விரோதிகள் தொலையப் பெற்றோமென்று திருவுள்ளம் குளிர்ந்திருக்கக் குறையில்லை. ஆக, 'ரமதே இதி ராம:' என்கிற வ்யுத்பத்தியினால் ஸ்ரீராமாயணத்தில் பல ப்ரகரணங்கள் ஸங்க்ருஹீதங்களாகும். .... .... .... ....

அன்றியே ராம:—'ரமயதீதி ராம': என்கிற வ்யுத்பத்தியும் பொருந்தும். தன்னைக் காண்பவர்களையும் தன் சரிதை கேட்பவர்களையும் மகிழ்விப்பவர் பெருமாள். உலகத்தில் அதிகாரிகள் வெவ்வேறு பட்டிருப்பர்களாதலால் ஒரே குணத்தினால் எல்லாரையும் ஏக ரூபமாக மகிழ்விக்க முடியாது. "ஸத்யேந லோகாந் ஜயதி தீநாந் தாநேந ராகவ:. குரூந் சுச்ரூஷயா வீர: தநுஷா யுதி சாத்ரவாந்." என்றாப்போலே ஒவ்வொருவர் பக்கலிலே ஒவ்வொரு குணத்தைச் செலுத்தி மகிழ்விப்பது ஸ்ரீ ராமாயண ப்ரஸித்தம். ஸௌசீல்யம் ஸௌலப்யம் ஸௌந்தர்யம் பொறுமை தயவு வாத்ஸல்யம் வீரம் என்றிவை முதலான பல திருக்குணங்கட்குக் கடலாயிருக்கின்ற பெருமாள் திருநாட்டிலே விலை செல்லுகில்லாத திருக்குணங்களை விலை செய்

